ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நமஃ.

# அத்வைதார்த்தப் பிரகாசிகை.

## முதற்பாகம்.



மங்கலம்.

ஐந்துமின் கரம்பொலி விந்தைவீர மாதவன்
சுந்தரப் பதங்கொள இந்தநூ லிலங்குமே.

ஒரு நண்பரா லியற்றிய நூலொன்றென் கண்ணுற வெய்தியது. அதன்கண் அவர் தம் மறுதலையோடு மாத்திரம் வாதாடாது ஸ்ரீமன் மகா தேவ அனுக்கிரக லீலா விக்கிரகமாகிய சங்கரப் பெருமான் சூத சங்கிதையைப் பதினெண்முறை பு[illegible]த்துத் திருத்தி விட்டதாகப் பொறித்திருந்தனர்; அஃதவரது மையலேயாம். என்னை? சிவகுருமைந்தனர் பரமாத்வைத சித்தாந்தத்திற்கியையச் சூதசங்கிதையைத் திருத்திவிட்டதாகக் கோடில், சைவாதிய சருவமதத்தினருந் தத்தம் புராணாதி நூல்களையுந் திரிபுசெய்துகொண்டதாகவன்றோ கூறப்பெறும்; பெறவே, இவரும் இவர் முன்னோரும் இக்குற்றத்திற் கிலக்காகாது தப்புவதியாங்ஙன மென்க. அன்றியும், இவ்வாறு திரிபுறத்

தற் பாலனவாயவற்றை ஸ்ரீவாதராயணர் திருவாக்கெனப் பிரமாணமாக யாவர்தாங் கைக்கொள்வர்; கொள்ளாதொழியவே, அவர்கூற்றுப்படியாவர்தா மாத்திகராவர். அத்திறத்திரிபு நம்சங்கரப் பெருந்தகையாற்றியதென்ப தவருக்கையமா? விபரீதமா? மெய்புணர்வா? மெய்யுணர்வெனின், அவ்வுணர் வெப்பிரமாணத்தாற் பெறலாயது; காட்சியாலெனின், அசம்பவமாதலி னஃதியையாதென்க. கருதலாலெனின், பதிஞ்ஞை எது திருட்டாந்தங்களே வரைவ தவர்கடன்; உரையாலெனின், ஸ்ரீவியாசாதியருரையா? தம்முன்னோருரையோ? ஆதியதேற் பொறிப்பதவர்கடன்; இறுதியதே லந்தபரம்பரா நியாயம் போலும் கட்டுக்கதை போலும் அறிஞரால் விட்டொழிக்கற்பாலதேயாம். மற்றைப்பிரமாணங்களாலெனின், வரையின் மறுப்பாம். அன்றியு மங்ஙனந் திருத்தியது யாவற்றையுமா? ஒன்றிரண்டையா? ஆதிய தேற்றாயபிரதி யிவர்க்குக் கையுற்றதியாங்ஙனம்? அந்தமேல் அச்சங்கர பரம்பரையின் மாத்திரமன்றோ நிலவுறல் வேண்டும். அஃதன்றி யச்சங்கர தயாநிதி புகழ்போல் யாண்டும் பாவியதென்கொல்? அஞ்ஞான் றஃதைத் தடுத்து மாற்றிக்கொள்வான் இவர் மதத்தினரெவரு மின்றுயதென்னைகொல்? புனைவிலிட்டது அசுத்தப் பிரதி

யேயிவர் சுத்தப்பிரதியை யச்சிட்டுத் துலக்க யாவரே தடிகொண்டு தடுத்தார். மேலுமவ்வாறு திருத்தியிருப்பிற் றமது பாம்பரையல்லாத வேறு கயிலாய சுத்தாத்வைதபாம்பரையிற்பொலிவுற்ற ஸ்ரீதத்துவராயசுவாமிகள் மொழிபெயர்த் தருளிய பிரஹ்மகீதையையும், இவர் கூற்றுக்குக் கூற்ருயவாற தென்னே? இன்னணமாதலினிவர் மையலுற்றுக் கையாடினு ரென்பதி லையமென்? இது நிற்க; இனித் திரிபுறத் திருத்திய தென்ப தியாதெனத்தெரிவாம்:—"பவுதிகயோகம் (சகுணம்), சாங்கியயோகம் (நிர்க்குணம்), அத்தியாசிரமயோகம் (வைதிக பாசுபதயோகம்) என்னும் மூன்றனுள்ளே நடுக்கணுற்ற நிர்க்குணப் பிரஹ்மத்தை முடிந்த நிலையாகப் பிரமா வானவர் கூறி, அதனை மெய்ப்படுத்தப் பரமசிவனை ஆவிர்ப்பவிக்கச் செய்தமை எங்ஙனங் கோள சங்கராாற் புதிதாகப் படைக்கப்பட்டுப் போயிற்றே," என்ருர்; எனவே,

## பிரமகீதை ஐந்தாவது அத்தியாயம்.

சிவனே யுள்ளான் பிறிதில்லை யென்றுதிரமா யறிவதுவே, பவமே யொழிக்கும் பரமார்த்தம் பகருநெறி தா னதுவாகு, மவமே யிதனை யொழிந்துளதா மவைதா

மிதனை யடைதற்குத், தவமே முதலாஞ் சரியைகளைச்
சாற்றுகின்ற தன்மையவே. 95

என நுதலி, அதன்பொருட்டாய்:—

ஆதர முடையீர் கேண்மி னருமறைப் பொருளீ
தென்றே,யோதலா லுவமை யில்லாப் பொருளிதி லைய
முண்டேற்,றீதற மழுவைக் காய்ச்சிச் செங்கையி னிடு
வே னென்று, ஞதனு யுலக மெல்லாம் படைக்குநான்
முகனு யுள்ளோன். 96

பத்தரா யுள்ளீர் கேண்மின் பகர்ந்தவே தத்தி னர்
த்த, மித்தகைத் தாகும் வேறென் றில்லையா மிதனி
லுங்கள், சித்தநம் புதலுண் டாகச் செப்பினே மானை
மூன்றே, டத்தனூர் பாதந் தொட்டே யென்றன னல
ரின் மேலோன். 97

அன்பரா யுள்ளீர்கேண்மி னறிவித்த பொருண்
மெய் யன்றே, லென்சிர மிற்றுவீழ்வ தென்றன னிது
வு மன்றி, யின்பமே யளிக்குமீச னிவ்விடந் தன்னின்
வந்து, தன்பெருங் கருணையாலுந் தளர்வறப் பண்ணு
கின்றான். 98

இவ்வண முரைத்துப் பின்னை யாவர்க்கு மன்பா
யுள்ளோன், செய்வண மொழிந்தே யீசன் றிருவடி

சிந்தை செய்து, மெய்வண மிழந்து தாழ்ந்து பணிந்து மெய்ப் பத்தி யாலே,யவ்வண மாகித் தன்னை யழிந்தன னயனு மையன். 99

அப்பொழு தளவி லாத வருளுரு வாய வீசன்
செப்பிடு மூவ ரேத்துந் திருவுரு வுடைய சோதி
யொப்பிலா மதியுஞ் சூடி யுமைபொரு கூற னாகி
யிப்படி வானோர் காணும் படியுள வியல்பின் வந்தான்.

ஆதனத்தே யிருந்தருளியபின்,—

அளவிலா வொளிய தாய வரனெழுந் தருள லுன்னித், துளபமா லுலக மியாவு மளிப்பவ னுவகை யோடுங், களமதார் கரைசேர் நாதன் கழலிணை நினைந்தப் போதே, யுளநெகிழ்ந் துருகி யொல்லை வந்தன னுணர்வின் மிக்கோன். 101

தேவர்கடுதியான்மகிழ்ந்து திருக்கரமமைத் தருளியபின்,

சத்திய மாகி வேத மொன்றுமே யளவை யாகு, மித்தன்மைப் பொருளை யெல்லா வுலகரு மறியும் வண்ண, நித்தரா மன்ப ரேத்து நிறைந்தமெய்க் கருணை யீசன், மெய்த்தகு பொருளீ தென்றே விளம்பிடல் செய்ய லுற்றான். 110

அஃதாவது:—

உலக மியாவு முயிர்பலவு நானே சிறிதும் வேறில்
லை, யலகி லறிவா லாய்ந்திடினு மாயா விடத்து மருத்த
மிதே, திலக மாய மறைதுணிந்து திகழ்த்தும் பொரு
ளு மிதுவென்ற, னிலகுந் தன்மை யனுபவமு மிதிலோ
ரைய முள தன்றால். 111

இது முதல், 123 வரை யுள்ளிட்ட செய்யுட்களி
னர்த்தங்களை யருளிச்செய்து பின் முடிபுரையாக

நானே முழுது மெனையொழிய நாடிற் சிறிதும்
வேறில்லை, யான பொருளை யருமறைதா னறையும் படி
யா னதனாலும், யானு மிசைத்த படியாலு மிதுவே
திடமா யுளபொருடா, னூன மின்றி நான்முகனு முரை
த்த துங்கட் குண்மையிதே. 124

இப்பொருளையப்பட்டோ ரிறப்பர்கள் கணத்தின்
மெய்யே, மெய்ப்படு பொருளை யென்றும் விடுதனிச்
சயம தாகு, மிப்பொருளையமின்றி யறிந்தவன் பவபா
சத்தை, மெய்ப்பட வொழிந்து மேலா மொளியினை
யடையு மன்றே. 125

பாசமோ சகனு மீசன் பகர்ந்தருள் செய்த தன்னை
நேசமோ டயன்மா றம்மை நீடுறத் தழுவிக் கொண்டு

வாசிலா வமரர் தம்மை யருட்கணு லமைத்து நோக்கிச்
சோதியா னந்த வெள்ளச் சுசுரூப ராமி னென்றான்.

என ஆதரமென்பது முதல் பாசமோசக னென்பதீ றுய யாப்புகளின் மூலசுலோகங்கள் யாவும், ஸ்ரீமத் பகவற்பாத ஆசாரிய சுவாமிகளால் "சிவனேயுள்ளான் பிறிதில்லை யென்று திரமா யறிவதுவே பவமே யொழிக்கும் பரமார்த்தம்" என்பதன் பொருட்டுப் பிரமாணிப்பான் புதிதாய்ப் படைக்கப்பட்டனவெனக் கூறியவாறுயிற்று.

"சிவனே யுள்ளான் பிறிதில்லை" எனப் பிரமதேவர் "ஏகமே வாத்துவிதம்" நிகர்ப்ப சுவகதசஜாதி விஜாதிரஹித மகாதேவனொருவனே யுளன், நித்த சுத்த புத்த சத்திய பரமானந்த வவனன்றி யிறையுஞ் சகஜீவ பரங்க ளில்லவேயில்லையென வமரர்க்குபதேசித்ததே போல் ஐயங் கொய்யவாங் கெழுந்தருளியதையல் சகிதமெய்யனும், "உலகமுழுது முயிர்பலவு நானே சிறிதும் வேறில்லை" என அப்பொருளையே ஆதியில் உபக்கிரமித்தருளி நாப்பண்ணு மப்பொருளையே நாநாவிதமாய்ப் புகன்றருளி முடிவில் "நானே முழுதுமெனையொழிய நாடிற் சிறிதும் வேறில்லை" என உபசங்கரித்தருளி முதலினு மிடையிலுங் கடையினும்

வேதத்தையே பிரமாணமெனக் காட்டியருளி இப் பொருளையே பிரம னுங்கட் குபதேசித்தன னென்றும், இதன் மாட்டையப்பாடின் றென்றும், ஐயமுறுவோ ரிறப்பரென்றும், ஐயமுறார் மெய்புறுவ ரென்றும் அருளி அம்மெய்ஞ்ஞான முறுமா றாசிர்வதித் தருளினன். இவையெல்லா மிவர்க்குப் பொய்யாப் புகட்டப் பெற்றனவாயின வன்றோ! அம்ம விறும்பூதே! "சிவனுமுள்ளான் பிறவுமுளவென்று திரமாயறிவதுவே பவமே யொழிக்கும் பரமார்த்தம்" எனத் திரிபுசெய்ததனிமித்தம் புகன்றவண்ண மெல்லா மென்னினோ இவர்க்கு முக்கனியும் பாற்சோறும் போன் மிகவினிதா யிருக்கும்போலும்! அவ்வண்ண மிவர் முன்னோ ராற்றாதகிவர் அதிட்டமின்மையே யன்றோ. சிவனுமுள்ளான் பிறவுமுள வெனவிவர் கூற்றுப்படியோ, சிலந்தி வருட வருஞ் சுகம்போற் சொல்லச் சுகமாயிருப்பினும் பின்னது வீங்கித் துன்பம் பயத்தலொப்பப் பேரிடரையன்றோ விளைக்கும்; என்னை? ஒரு தேயத்தரையனை யவன் பிரசை கண்ணுற்றுப் பூமிகள் வீடுகண் முதலன வெங்கள் பெயரால் ரிஜிஸ்டராய் எங்களனுபவத்தின்கண்ணே யிருப்பதால் அரைய! நினக்குப் பொதுக்கட்டடங்களும் ரோட்டுக்குழிகளும், குப்பை

மேடுகளுமே யுரியனவென வறைவனுபின் என்கதி
யுறுமோ அக்கதியுறுவதி லியாதையமென்க.

அன்றியு மிஃதியாங்ஙனந் தானேனும். பதி, விபு;
பசுக்கள், நாநா வொடு விபுக்கள்; பாசமு மங்ஙனே.
நாநாவிபுக்கள் சத்தியமாயிருக்குமாறுற்றுவா னுன்முக
னுனு மொல்லுங் கொல்லோ! இவ்வுடலமெவன் போக
சாதனமாம்; யாவருமிவ் வுடலத்துறைவதான், ஒருவனு
க்கே முற்புற்கலத்தே செய்ததால் வந்ததெனின், ஆங்கி
வரிலரோ. அபிமானமவனுக்கே யெனின், மற்றெவர்
க்கு மில்லையோ? அதற்குமுன் முற்காயங்களுடும் இன்
னணமே யுறலாலனவத்தையாதலின். இஃதொன்றோ!
இத்திற வளவிறந்த தோடங்களாம். இது விடயத்தி
லிவர் ஆயுளளவும் முயலினும் குற்றங் குற்றமேதான்,
எம்முறையானும் நாக்கலேலவே யேலாதெனத் திர
முற வுணர்தற் பாற்றும்.

இதுநிற்க; இன்னமொருவிந்தை; அஃதாவது வரு
மாறு:—

"[இந்திரத்தியும்நர் கூர்மரை (நாராயணரை) நோ
க்கி, சுவாமி] மூவிதபாவனைகளையும் எனக்கு அருளுக"
என்று வேண்ட "(நாராயணர்) முதலாவது பாவனை

என்விஷயம் (சகுணவிஷயம்), இரண்டாவது பாவனை அவ்வியக்தம் (நிர்க்குணம்) பற்றியது, மூன்றுவது பாவனை முக்குணங்களைக் கடந்த பிராம்மிபாவனை; இம் மூன்று பாவனைகளுள் ஒன்றை யறிஞன்பாவிக்க" என்றும், "அசக்தன் (சகுணபாவனையாகிய) முதலாவது பாவனையையே ஆசிரயிக்க எனவைதிக சுருதி கூறிற்று" என்றுங் கூர்மர் இந்திரத்தியும்நர்க்கு மூவித பாவனைகளைத் தொகுத்துக்கூறி யருளி முதலாவது பாவனை யின்னதென உரைத்தருளினர் என்றார்.

முற்புகன்ற அத்தியாசிரம யோகத்தையும் மேற் புகன்ற பிராம்மி பாவனையையும் ஏகமென வேற்றவிவர் " பாஞ்சராத்திரம் சகுணமாக, பாசுபதமும் சகுணமாக நடக்கணுற்றது சந்நியாசியாரது மாயாவாத நிர்க் குணப் பிரமமாம்" என்றார்.

குணங்கடந்த பிராம்மிபாவனை யானது பாசுபத சகுணமாயது யாங்ஙனம்? அன்றியும் "அத்தியாசிரம" மென்னும் பதத்திற்கு, அதி, பூசையில் என்னும் ஸ்மரணமிருத்தலின், அத்தியந்தம் பூச்யதம ஆசிரமத்தை யுடையான் பரமஹம்ச சந்யாசி, அவனேயத்யாசிரமி யென ஸ்ரீமத் பகவற்பாத ஆசார்ய சுவாமிகளும், சர்

வோற்கிருஷ்ட ஆசிரமமுடையான் அத்யாசிரமியென மகா யோகீஸ்வரராகிய ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகளும், அந்தியாசிரமியெனப் பாடபேதம் வைத்துச் சந்யாசியென நாராயணமூர்த்திகளும், அதி, பூசையில் என்னும் ஸ்மாணத்தால், அத்தியாசிரமம், சந்நியாசாசிரமம், அதனினும் பரமஹம்ச ஆசிரமமென விஞ்ஞானபகவானும், பகுதிபத பதார்த்தமுறையாய்ப் பொருளருளியிருப்ப, அஃதை மிச்சையெனமருண்டு எப்பகுதி விகுதிப்பாகுபாட்டா லிவர் அத்தியாசிரம பதத்திற்கு வைதிக பாசுபதமெனப் பொருள் கொண்டார்? இது தானுமையலற்ற மெய்ஞ்ஞானம்! விஞ்ஞானமயகோச விஹீனர்தா மிதனைமெச்சுவர்.

"குணதிகா" என்னும் மூலபதத்திற்குக் குணங்களைக்கடந்த தெனப் பொருள் கோடக்கிடப்ப அஃதையொழித்து முக்குணங்களைக்கடந்த வென்றார் எனின், குணத்திரயமின்றேனும் சர்வஞ்ஞத்வாதி கல்யாண குண விசிஷ்டமாய்க் கோடலெளிதென்றே! அங்ஙனமியையாதாம்; என்னை ? சர்வஞ்ஞத்வாதியாவும் சுத்த சத்துவ காரியமே யாதலினென்க. மாயாகாரியத்தை மாயைகடந்ததில் வைப்பது மதிமான்கள் கொள்கையன்றாம்; ஆகவே, முதலது:—சர்வஞ்ஞத்வாதி

கல்யாண குணவிசிஷ்ட காரணப் பிரஹ்மோபாசனை யேயாம். அற்றேல் சகுணமூர்த்தோபாசனையிருப்ப இதனை நுதலிய தியானங்கூடுமாலோ வெனின்? அற்றன்று; முதலாவது பாவனை என் விஷயமென நாராயணர் திருவருள் செய்தமையானும், யானென் பதற்குச் சருவபூதாந்தர்யாமியாய பரமேச்சுரன் யான் என வருளினமையானும், இறுதியத்தியாயத்தில் இத னினு மசக்தன் ஹரனையும் விஷ்ணுவையும் பிரஹ்மா வையு மர்ச்சிக்கவென உண்மை யானுமென் றுணர்க. இடையது:—விஜாதிய விருத்திரகிதசஜாதிய விருத்திப் பிரவாஹ வடிவதனுமானசியென்னும் மூன்றும் பூமியிற் றேன்றும்நிதித்தியாசனமாயநிர்க்குணத்தியானமாமெ ன்பதுடன்பாடேயாம். என்னை? தமத்திற்கப்பாற் பட்ட தாயும், சோதியாயும், அக்ஷரமாயும், நித்தியானந்த மய மாயும், அவ்யயமாயும், ஏகமாயும், பரப்பிரஹ்மமாயும் இருப்பதியாதோ அதுபரத்தினின்றும்பரதரதத்துவமெ னக் கூறியருளினமையானும், சுத்தாக்ஷர அவ்யக்தமே காரணமெனக்கழறியருளினமை யானும், மற்றவற்று னு மென்க. இனியிறுதியதோ: நிர்விகற்பப்பிரஹ்மோபஸ்தி திவடிவசத்துவாபத்தியென்னும் நான்காம் பூமியிற்றோ ன்றுநின்ற சமாதிவடிவதாம்; இஃதிருநிருவிகற்பசமாதி

வடிவமாய் ஆசானருளா லறிதற்பாலதாம். இஃதின்னனமாக, இவர் ரிபுகீதையில் நானே சுத்தான்மாவென்பனவாதிய வற்றாற் பாவிக்கவென நடுக்கணுற்றதாய நிர்க்குண பாவனையையே புகன்றிருக்கின்றதென்றார். இது பொருண்மா றுட்டாம்; யாங்ஙன மெனின்?

நுதலுதும்:—ரிபுகீதை நானே சுத்தான்மா என்பன வாதிய நிர்க்குண அனுசந்தானத்தாற் பாவித்து நிர்விகற்ப பிரஹ்மோப ஸ்திதி பெற்றுச் சாக்ஷாற்கார முற்றுப் பரமானந்த நிலையெய்த உபதேசித் திருப்ப, பாவித்து என்னு மெச்சத்தைப் பாவிக்கவென வியங்கோளாக்கிப் பொருண்மாறுட்ட மிபற்றியது இவர் மேன் முற்றினுங் குற்றமாகாதெனக் கற்றவர் சொற்றிடுவரா? இனித் தப்த பாசுதாங்குவ லெனச் சதுர்முகன் சாற்றியதூஉம் இந்நிர்க்குணபாவனை யென்னும் நடுக்கணின் பொருட்டேயென்றார். இதுவும் மருட்சியேயாமென் றுணர்க; தப்தபாசு தாங்குவலெனச்சதுர்முகன் சாற்றியதூஉம் சாத்தியபாகமாய பிராம்மிபாவனையின் பொருட்டேயன்றி நிர்க்குணபாவனையின் பொருட்ட தன்றாதலின். “சிவனே யுள்ளான் பிறிதில்லை யென்று திரமாயறிவதுவே” என அசம்பாவனை விபரீதபாவனை யற்றதிரமாய அபரோக்ஷ ஜீவப்பிரஹ்

மைக்கிய சாக்ஷாற்காரமே நவின்று இஃதே பவத்தை யொழிக்கும் பரமார்த்தமென்று நுதலியதை மதமாற் சரியமின்றி உய்த்துணர்ந்துபொருள்கோடின் யாங்ஙன மிரண்டாவதன் பொருட்டதாம்? இதுபிரமாணமாயது தா னிவர்க்கு யாங்ஙனம்? இனி "ஆசிரிய ராற்றியரு ளிய உபதேசத்தாற் பிரஹ்மசாக்ஷாத் காரமும் அவித் தியா நிவிர்த்தியும் கூறப்பட்டன" என வித்தியாரண் ணியர்முடித்துக்கூறியதூஉம் இவ்விரண்டாவதாயநிர்க் குண பாவனையின் மாட்டேயென்றார். இதைப்போற் குற்ற மிவர் மேல் வேறுளதென விவேகிகள் விள ம்புவரா! இவர் எந்த வேதாந்த ஆசிரியர்மாட்டிதனைக் கற்றார். ஷை ஸ்ரீவித்தியாரண்ய முனீந்திரர் முடித் தோதிய சாக்ஷாற்காரம் இவர் கூற்றுக்கியைய நிர்க் குணபாவனையின் பொருட்டதன்றாய்ப் பிராம்மிபாவனை யின் பொருட்டதேயாம்; நிர்க்குணபாவனையாற் பரமா னந்தவடைவெய்தாதென்பதொருதலையே யன்றோ? அவித்தையின் நிவிர்த்தியானே பரமானந்தம் பிராப்தி யாதலின். அவித்தை யெனினும் மாயையெனினும் மோகமெனினும் பொய்யுருவியெனினும் தமமெனி னும் அஜையெனினும் பிரகிருதியெனினும் பிரதான மெனினு மொக்கும்.

இப்பிராம்மி பாவனை யெய்தியோனையே கூர்மபுராணம் "யாவன் ஆன்மா அபரபரியாய பிரஹ்மத்தின் கண்ணே ரதியாவனோ, நித்திய திருப்தனோ, மஹாமுனியோ, சம்யக்தரிசன சம்பன்னனோ (நற்பிரஹ்மதரிசன முற்றவனோ) அவன் யோகி பிக்ஷுவென்று நுதலப் பெறும்" எனக்கூறியது. அன்றியு மிறுதியத்தியாயத்தில், "அவ்வியக்தவடிவமே யிச்சேதனு சேதனவுலகம், அஃது ஈஸ்வரன் பரப்பிரஹ்மம், ஆதலின் பிரஹ்மமயம் உலகம்" எனக்கூறினமையின், அவ்யக்த விஷயமாயதூஉம், பரப்பிரஹ்மாபர பரியாய பரமேசுவர விஷயமாயதூஉம் ஒன்றேயெனக்கொள்க. அற்றேல், அக்ஷர பாவனையெனவும் பிராம்மிபாவனை யெனவு மிரண்டாய்ப் பகுத்திருத்தலின் ஒன்றென்பது யாங்ஙனமெனின் ? உண்மையே! ஆயினும் தனுமானசி, சத்துவாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவனை யெனப்பெயரிய நான்கு பூமிகளின் மாட்டுள்ள விருத்திகட்கு ஒரு சிவமே விஷயமாயினும், எங்ஙனம் வேற்றுமையோ அங்ஙனமே விருத்தியுண்மை, சூக்கமித்துபஸ்திதியென்னுமிருபகுப்பாற் பாவனை யிரண்டாய்ச்சாதனமாயுஞ் சாத்தியமாயுமாய தென்றுணர்க. அன்றியும், கூர்ம புராணம் முதலோத்தில்

" ஆத்மந்யாத்மான மந்விக்ஷ்ய ஸ்வாத் மந்யேவா கிலம் ஜகத், ஸம்ப்ராப்ய பாவனு மந்த்யாம் பிராஹ்மீ மக்ஷாபூர்விகாம்" என்னும் சுலோகத்திற்கு "தனக்கு மெய்ப் பிரமம் விடயமா யிராமற் றுனதன் சாட்சியா யிராமற், றனிற்பிறி தறத்தா னுகவப் பரத்தை யறிந்த வன் றுனறிந் தவனுந், தனிற்பிறிந் தறியா தவனறிந் தவனு மறிந்தவன் றுனறிந் திலனு, முனற்கரும் பிரம முணர்ந்தவர்க் குணர்வின் றுணர்வுறுர் தமக்குணர்ந்தது வாம்" என்றும், "தர்க்க மானந் தானெழியத் தானு யுள்ள பேரொளியை, மிக்க கர்த்தா வாகுதலும் விடய மாகு தலுமொழியப், பொக்க மறவே றறக்கண்ட பொழுது புரைதீர் பொருளான, தக்கபிரம தத்துவத்தைக் கண்டா னுகுந் தானுக." என்றும் கேனுப நிடத முத லியவற்றில் அனுபூதி யறைநெறி முறையே, ஆத்மன் யாத்மான மன்வீக்ஷ்ய - பூரணமாய தன்பாற் றன்னைத் தரிசித்து, ஆத்மன்யே வாகிலம் ஜகதன்வீக்ஷ்ய - தோன்ற மாயதன் மாட்டே சருவ சகத்தையும் வேறறக்கண்டு வாதனையின் கோஷதயுங்காதி, அக்ஷர பூர்விகாம் - நிர்க் குண உபாசனையாற் பெறலாய அஃதாவது விளம்பிய விஜாதி விருத்தி விவதான ரகித சஜாதிய விருத்திப் பிரவாகவடிவ அல்லது சவிகற்பசமாதி வடிவ அக்ஷர

உ

சிவமயம்

பாண்டிநாட்டு நகரத்தைச் சேர்ந்த கோவிலூர்

ஸ்ரீ வீரப்பசுவாமிகளென்னும்

# வீரசேகரஞானதேசிகர்

## கோவிலூர் பதிகம், திருக்களர்பதிகம், பொதுப்பதிகம், சுவாமிகள் அவதாரஸ்தலம்.



இவை

தஞ்சாவூரைச்சார்ந்த திட்டை

ரெங்கசாமியால் இயற்றியது.

தஞ்சை ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

எம். பொன்னுசாமிபிள்ளையவர்கள்

பரிசோதித்து

திருப்பத்தூர் தாலுகா கோட்டையூர்

ஸ்ரீ உ. ராம. அ. அண்ணாமலைசெட்டியாரவர்கள்

குமாரர் அழகப்ப செட்டியாரவர்கள்

வேண்டுகோளின்படி

தஞ்சை ஸ்ரீ வித்தியாவிநோதினி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

**1912.**

"ஆத்மங்யாத்மான மங்விக்ஷ்ய ஸ்வாத் மங்யேவா கிலம் ஜகத், ஸம்ப்ராப்ய பாவனு மங்த்யாம் பிராஹ்மீ மக்ஷரபூர்விகாம்" என்னும் சுலோகத்திற்கு "தனக்கு மெய்ப் பிரமம் விடயமா யிராமற் றுனதன் சாட்சியா யிராமற், றனிற்பிறி தறத்தா னுகவப் பரத்தை யறிந்த வன் றுனறிந் தவனுந், தனிற்பிறிந் தறியா தவனறிந் தவனு மறிந்தவன் றுனறிந் திலனு, முனற்கரும் பிரம முணர்ந்தவர்க் குணர்வின் றுணர்வுரூர் தமக்குணர்ந்தது வாம்" என்றும், "தர்க்க மானனந் தாஞெழியத் தானு யுள்ள பேரொளியை, மிக்க கர்த்தா வாகுதலும் விடய மாகு தலுமொழியப், பொக்க மறவே றறக்கண்ட பொ ழுது புரைதீர் பொருளான, தக்கபிரம தத்துவத்தைக் கண்டா னுகுந் தானுக." என்றும் கேனுேப நிடத முத லியவற்றில் அனுபூதி யறைநெறி முறையே, ஆத்மன் யாத்மான மன்வீக்ஷ்ய - பூரணமாய தன்பாற் றன்னைத் தரிசித்து, ஆத்மன்யே வாகிலம் ஜகதன்வீக்ஷ்ய - பூன்ற மாயதன் மாட்டே சருவ சகத்தையும் வேறறக்கண்டு வாதனையின் கோதையுங்காதி, அக்ஷர பூர்விகாம் - நிர்க் குண உபாசனையாற் பெறலாய அஃதாவது விளம்பிய விஜாதி விருத்தி விவதான ரகித சஜாதிய விருத்திப் பிரவாகவடிவ அல்லது சவிகர்பசமாதி வடிவ அக்ஷர

உ

சிவமயம்

பாண்டிநாட்டு நகரத்தைச் சேர்ந்த கோவிலூர்

ஸ்ரீ வீரப்பசுவாமிகளென்னும்

# வீரசேகரஞானதேசிகர்

## கோவிலூர் பதிகம், திருக்களர்பதிகம், பொதுப்பதிகம், சுவாமிகள் அவதாரஸ்தலம்.

இவை

தஞ்சாவூரைச்சார்ந்த திட்டை

ரெங்கசாமியால் இயற்றியது.



தஞ்சை ஹைஸ்கூல் தமிழ்பண்டிதர்

எம். பொன்னுசாமிபிள்ளையவர்கள்

பரிசோதித்து

திருப்பத்தூர் தாலுகா கோட்டையூர்

ஸ்ரீ உ. ராம. அ. அண்ணாமலைசெட்டியாரவர்கள்

குமாரர் அழகப்ப செட்டியாரவர்கள்

வேண்டுகோளின்படி

தஞ்சை ஸ்ரீ வித்தியாவிநோதினி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

**1912.**

உ

சிவமயம்.

நகரத்தைச்சார்ந்த கோவிலூர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ வீரசேகரஞானதேசிகர்

# கோவிலூர் பதிகம்.

விநாயகர் வணக்கம்.

ஆரணவோங் காரமகா மேருற் றோங்கி
யருண்மிகுமெய்ஞ் ஞானமதம் பொழிந்தெஞ் ஞா
காரணவாங் காரமுளை கடிந்து சிந்தை [ன்றுங்
கவளமதாய்க் கொண்டுமெய்ற் கவச நூறித்
தாரணமோங் கடியருளத் தனிப்பொற் கூடந்
தனிலுலவிக் கோவிலூர்த் தலத்தின் மேவும்
வாரணமாங் காரணனை வணங்கி யேத்தி
மனதினினைந் தகமகிழ்ந்து வாழ்கு வோமே.

நூல்.

வேத மோதிய சோதி கண்மணி
மின்னு மாமகு டம்முடி
மேன்மை யோங்கரு ளடியர் பாற்பொழி
விந்த மாமலர் வாள்விழி

நாத மேற்பர ஞான மீதென
  நவிலுஞ் செவ்விதழ் வாய்மலர்
நாளி ஞயக னென்ன நீறணி
  நளின நாண்மலர்த் திருமுகம்
போத நற்பொருள் கூட்டு முத்திரை
  போற்று மெய்ம்முறை பொற்கரம்
பொய்மை யில்லடி யார்க டஞ்சிரம்
  புல்லும் பாதுகைப் பூண்பதம்
மீதங் கோவணக் கீளு டைத்திரு
  மேனி யாயருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
  மெய்ய ருட்குரு நாதனே. (க)

என்று நற்றிரு நெல்லை நாயகி
  யேக நாயகன் கொற்றவா
வீசன் கோவிலூ ரார்ம டாலயத்
  திறைமை பூண்டமெய் யாண்டவர்
ஒன்று சீர்முத்து ராமலிங் கப்பே
  ரோங்கு சுவாமிகண் மரபினி
லுயர்வே தாந்தத்தோ ருண்மை ஞானம
  தோர்ந்து ணர்ந்தருண் மௌனியாய்

மன்று ளாடியை நாடு பாகர்மெய்ம்
  மாண்பு றச்சிர வணமொடு
மனன மேனிதித் தியாச னந்தரும்
  வடிவ மாய்முதன் மாயையை
வென்று வொன்றிரண் டற்ற பூரண
  மேய வாவருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
  மெய்ய ருட்குரு நாதனே. (௨)

மூசு பாசம தோச்சு ஞானவை
  முதலெ வற்றினும் வன்னிகான்
முந்து லாவுற முற்செய் தாண்டவர்
  முத்து ராமலிங் கிறையனுர்
தேசு லாவரு ணுச லப்பெயர்
  செய்ய சுவாமி ளவரடி
சேர்சி தம்பரச் சுவாமி யன்னவர்
  தெய்வத் தாண்மலர் சூடிச்சீர்
பேசு மாதவ ராம சுவாமிகள்
  பெருமை யாரவ ரடிகடாம்
பேணி யொண்குரு பீட மேவிப்பின்
  பெரியண் ணுமலேச் சுவாமிகள்

வீசு மாமணிப் பீட மேவிய
விதித்த வாவருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
மெய்ய ருட்குரு நாதனே. (௩)

அக்க மாமணி மிக்க நீறணி
யம்ப ரம்மவை பூண்டரு
ளாண்ட வர்க்கன்ப ராந லார்மிகு
ராம நாதனற் சுவாமிகள்
ஒக்க லாரரு ளுச லப்பெய
ரோங்கு வாரப்புக் குட்டியார்
உண்மை யோடுளச் சின்னய் யாமறை
யோது வெள்ளைய சுவாமிகள்
பக்க மேவிய பழனி யப்பனூர்
பகரண் ணுமலேச் சுவாமிகள்
பற்ற தோட்டிடு குட்டை யாவெனும்
பத்தர் நாகப்ப சுவாமிகள்
மிக்க மாமுத்து வீரய் யாதியர்
மேய வாவருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
மெய்ய ருட்குரு நாதனே. (௪)

ஞான சாதனத் தேறு மோனமெய்ஞ்
ஞானி கள்குழு மேவியே
நானு மென்னது நீங்கு பூரண
நண்ணி யாநந்த சொரூபமாந்
தான தாம்பதம் வீற்றி ருந்தடி
சார்ந்த நல்லதி காரிகள்
தாப மூன்றையு நீத்து சிற்சுகஞ்
சாரத் தற்பத தொம்பதத்
தீன மில்பொருள் கார ணத்துட
னெய்து காரிய முறையினும்
ஏத மில்லசி பதம தொண்பொரு
ளேத்து மத்வித முறையினும்
மேன லந்திகழ் தரவு ணர்த்திய
மேல வாவருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
மெய்ய ருட்குரு நாதனே. (௫)

காவி லேறிய வன்னி மாவனங்
கழனி வாசலென் கோவிலூர்
காணுங் கொற்றவா ளீச னாலயக்
கர்ப்பக் கிரகமா மண்டபம்

பூவி லேறிய வேனின் மண்டபம்
 பொன்ம திற்றிருக் கோபுரம்
புகழ்வி மானந்தேர் யானம் வாகனம்
 போற்று மாமணிப் பணிதிகள்
தேவி லேறிய நந்த னங்கயஞ்
 செய்து நித்யநை மித்திகந்
தீப மோடுபல் லாற்று சீர்கவி
 செப்ப ருந்தகைத் தின்னவா
மேவி லேறிய சிவதி ருப்பணி
 மேய வாவருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
 மெய்ய ருட்குரு நாதனே. (சு)

பண்ண ருந்தமிழ் வேத மேத்திய
 பாரி சாதவ னேச்சுரர்
பதிய தாந்திருக் களரி ஞலயம்
 பகரு மாகம விதியினு
லெண்ண ருஞ்சிவ தரும மேபுரி
 யிறைவன் சோழனென் றேத்தவே
யின்ன வாதிருப் பணிகள் செய்தவா
 றென்னே யற்புத மென்னவே

நண்ண ரும்பணி யாவு முற்றிமே
ளுடு நல்விழா நாளினில்
நா தன் றேரினி னடவு மேல்வையி
ளுடி மாதேவ தேவெனு
விண்ண ருந்திசை நோக்கிப் பூரண
மேய வாவருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
மெய்ய ருட்குரு நாதனே. (எ)

பாக மானபல் சீடர் தம்பரி
பக்கு வம்முணர்ந் தவருளப்
பாங்க றிந்ததற் கேற்பப் போதனே
பாலிப் பாயதை யில்லவர்
தாக மாகநன் னடையி னின்றரு
டயவு ளாய்புர மூன்றையுந்
தகன மாக்கிய சிவனே வென்றவே
டன்னே வென்றருள் வல்லவா
ஏக மாநெறி நின்ற ருந்தவ
மேந்து நல்லவர் நல்லவை
யென்று மின்றிவ ணிகழ வேண்டுவெ
வெய்த வாதினம் வைத்தவா

வேக வெம்பவ வெம்மை தீர்த்தருண்
மேக மேயருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
மெய்ய ருட்குரு நாதனே. (அ)

அண்ட மும்பல பிண்ட பேதமு
மத்தி யாசம தென்னவே
யாய்ந்து கண்டுசெங் கற்ப பேதங்க
ளழிய நானென தென்பவுங்
கண்ட வாதவன் முன்ன லாமெனக்
கழிய ஞாதுரு ஞானமுங்
கருது ஞேயமுங் காண லாதொளிர்
கற்ப ஞாதித ஜோதியிற்
பண்ட வாதனை யாவு நீங்கிய
பரசு கோதய வெளியினிற்
பார மார்த்திக வத்வி தானந்த
பாவ ஞாதித பதமதில்
விண்ட மாமறை முடிபு கன்றவா
மேய வாவருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
மெய்ய ருட்குரு நாதனே. (கூ)

ஆதி யாய்நடு வந்த மாயங்
கடன்ற தாம்பரம் பொருளதாய்
அருவ மாயரு வுருவ மாயுரு
வாய தீதசிற் சொருபமாய்ச்
சோதி யாய்ச்சுட ராய ளாவு
சுயம்ப்ர காசவி லாசமாய்த்
தூய தாயதின் மேல தாம்பரி
சுத்த ஞானவா காரமாய்
நாதி யாயது வாய நாதியாய்
நானெ னும்பதா தீதமாய்
நாத மாயநா தீத மோனமாய்
ஞான மாய்சிதா காயமாய்
வேதி யாநெறி கூறு மேலதாய்
மேய வாவருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
மெய்ய ருட்குரு நாதனே. (கo)

தான தாகிய பார மார்த்திக
சச்சி தானந்த சிவபதஞ்
சார லாவகை யூற தாமுதற்
சத்தி யையழித் தத்வித

ஞான வானந்த மோன நன்னிலை
நாடு மெய்யடி யாரொடும்
நண்ணி யெங்கணு நீக்க மின்றியே
நணுகி நின்றன யாவையுங்
கான மாமறை மேல தாமெனக்
கருதி யஞ்சலித் தேத்தியே
காணில் யாவர்க்கு முயர்வ தாயநற்
காட்சி யோடருண் மாட்சிசால்
மேன லோய்நினக் கடியம் யாமென
மேவ நீயருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
மெய்ய ருட்குரு நாதனே. (கக)

நித்த னேதுப நிட்த மோதவு
நிறையு யிர்சக மொடுபர
நிலைமை கண்டதன் வரைய கன்றொளி
நிலவு பூரண வெளியிலே
சுத்த நிட்கள மோன நீணிலைத்
தூய வாய்மைகை கூடவுந்
தூர மாகப்புன் காம மாதிகள்
தோய்ந்தி டாவகை நீக்கியே

சித்த மேவுசங் கற்ப வேதனஞ்
சேர லாதுமெய் யிட்டையில்
சித்தி ரம்மென வசைவி லாநெறி
சேர்ந்து நின்றுவி தேகமாம்
வித்த கர்ப்பெறு தான தாமுத்தி
மேவ நீயருள் கோவிலூர்
வீர சேகர ஞான தேசிக
மெய்ய ருட்குரு நாதனே. (கஉ)

ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகர், கோவிலூர் பதிகம்.

முற்றிற்று.



## பரிபூரணதினம்.

### இரட்டை எழுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

வேதாக மாதீத நாதாந்த சொரூபமே
 மேலாய மானு டமதாய்
மேவுமா நகரத்து வாழுநற் கைலாச
 விநாயகர் விளங்கு தலமாம்
ஆதாய புதுவயலி னவதரித் தருங்கலைக
 ளாய்ந்தோங்கு கோவிலூரின்
ஆலய மடாதிபதி யாசிரிய பீடத்
 தமர்ந்திருளை யடியர் நீங்க
ஓதாதி வீரசே கரஞான தேசிக
 வுயர்ந்த குரு வென்னு நாமம்
உகந்தவர் திருக்களர் திருப்பணி யியற்றிபா
 னுற்றுலாப் போந்த காலை
யீதாரு மற்புத மெனத்தேவ தேவவென்
 றேகபூ ரணம தான
தெழில்கலி யையாயிரத் தீராறின் வைகாசி
 யேர்பிறை விசாக நாளே.



உ

சிவமயம்.

ஸ்ரீ-ல-ஸ்ரீ வீரசேகரஞானதேசிகர்

# திருக்களர் பதிகம்.

—····—◦•◦—····—

## காப்பு.

அருணனில வொளிகருணை
 பொழிவிழிமுன் ருளிர்செய்
யளவிடைபிங் கலைசுழிணை
 யாடியதோ ணுசி
பெருசெவிசிற் பிரணவஞ்சொன்
 னுல்வாய்வெண் கோடு
பிறங்குமணி மகுடமுடி
 பெறுமியானை யாகி
யொருவில்கர நான்கொடுயார்
 புதரமிகுந் தேவா
யுடையிடைகீ ழடர்தொடையோ
 டுறுகுறுந்தாட் கணமாய்
வருமிவைமு வுருவுமொரு
 வுருவதிருக் களரில்
வளருவிநா யகனிருதாள்
 வாழ்த்திவணங் குவமே.

## நூல்.

தெய்வத்தா மரையிற் றிகழ்தரு மிறையுந்
திருத்துழா வணிபுயத் திறையுந்
தேடருஞ் சோதிச் சிவகிரிச் சொரூபச்
சிந்தனை யடிகண்மெய் யருள் கொண்
டுய்வதே நெறியென் றுணர்ந்தநல் லடியார்க்
குபசரித் தமுதளித் தவர்செய்
யுயர்தவந் தமதா வுறுமிகு நெறியை
யுதவுவாய் கருணைகூர்ந் தெமக்கே
மெய்வசி யகமா மேவுசிற் சுகமே
மேதினிக் குதவுகற் பகமே
வேதியர் விபுதர் மிக்கநன் மாக்கண்
மேனல நகரத்தார்க் கெல்லாஞ்
செய்வர முதவுந் தியானசற் குருவே
தென்கோவி லூரமர்ந் தருளித்
திருக்களர் தலத்திற் சிவமதாம் வீர
சேகர ஞானதே சிகனே. (க)

குருவருட் டுணைமேற் கொண்டகனி யக்கங்
கூடிரு கலைநடுச் சுழினைக்
குகையுணின் றிவர்ந்து குளிர்மதி யமுதங்
கொண்டுடன் முட்ட மெய்ஞ் ஞானப்

பெருவிசும் படைந்து பெறற்கரு நிபிடப்
 பெரியவானந்த மாய்ப் பிரமப்
பேரொளிப் பிழம்பாம் பேரவரி றைஞ்சும்
 பெற்றிய ரடித்துணை யருள்வாய்
சுருதியாதிய நற்றொல்கலை யனைத்தின்
 றொகுப்பெடுத் தொருங்குடன் றோன்றத்
தொண்டரை யருளிச் சுயம் பிரகாசச்
 சொரூபந் தாமாக்கு தூயோனே
தெருளுணர் வுடையோர் சிந்தையிற் சுகனே
 தென் கோவினூ ரமர்ந் தருளித்
திருக்களர் தலத்திற் சிவமதாம் வீர
 சேகர ஞான தேசிகனே. (உ)

சுகமிலை பரத்திற் றோன்றிய பகுதி
 தோன்றுமுக் குணங்களிற் றோன்றுந்
தூயநன் மாயை தொடர்தரு மவித்தை
 தொல்லையா வரணவி சேஷபத்
தகமிலை யீச வணுநிலை யுணரா
 தகந்தையின் மயங்கிப்பல் பிறப்புற்
றலைகட லுலகி லலைதர லொழிந்துன்
 னருட்கிட னுவதென் றருள்வாய்

சகநிலைக் குரியோர் சாதுசன் மார்க்கர்
 சைதன்ய ஞானநல் லறிஞர்
சரியைநற் கிரியை சார்ந்தசற் குணத்தோர்
 தனமிகு நெறிபெறு வணிகர்
செகநிலை சுரருந் தேவதே வென்ன
 தென்கோவி லூரமர்ந் தருளித்
திருக்களர் தலத்திற் சிவமதாம் வீர
 சேகர ஞானதே சிகனே. (௫)

என்னகத் தொளிரு மீசனே குருவா
 யெழுந்தென்முன் வந்தருண் மௌனத்
தியல்புமோங் காரத் தீரெழுத் தகர
 வெழுத்தொடு மைத்தெழுத் தியல்புஞ்
சொன்னவைம் பூதத் தொடர்பி னிங்கரணச்
 சுரோத்திர முதற்பொறி யைந்தாற்
றொடருமைம் புலனுந் தோன்றிடா நிலையுஞ்
 சொற்றந்து மறிகிலே னெனையாள்
முன்னைநான் மறையின் முகப்பிரக் ஞான
 முதுப்ரம மகம்பிர மாஸ்மி
மொழிதத் துவமசி முடிவய மாத்மா
 மூர்ந்துறும் பிரமமாம் பொருளே

தென்னவ னாட்டிற் றிகழ்வன்னி வனமாந்
தென்கோவிலூ ரமர்ந் தருளித்
திருக்களர் தலத்திற் சிவமதாம் வீர
சேகர ஞானதே சிகனே. (௪)

வனமலைக் குகையுண் மாதவம் புரிந்தும்
மந்திர மாலிகை யுணர்ந்தும்
வாயுவை யடக்கி மனச்சலிப் பற்று
மௌனத்தி லசைவற விருந்துங்
கனலெழு மதியிற் கசிந்தொழு கமுதங்
களித்துடல் பூரிக்க வுண்டுங்
கலைபல வோதி கதிநிலை யமைந்த
காட்சியர் துணைக்கொள்வ தென்றோ
நனவொடு மடமை ஞாலமோ ரேழும்
ஞானமாம் பூமியோ ரேழும்
நணுகிடா வதீத நாட்டெழுஞ் சோதீ
நானெனு மயலைவிட் டோட்டுந்
தினகரா வடியார் சிந்தைமே வியவா
தென்கோவி லூரமர்ந் தருளித்
திருக்களர் தலத்திற் சிவமதாம் வீர
சேகர ஞானதே சிகனே. (௫)

மேவிரும் பரத்தில் விளேமுதற் பகுதி
விடுத்திடு விவேகபூ ரணமே
மேதினி மெய்யா விரித்திடு மாயை
விலக்கிடுந் தற்பதப் பொருளே
ஆவியோ டுறுமெய் யகமெனு மவித்தை
யணுகிடா தொம்பதத் தறிவே
அகிலதத் துவங்க ளகமெனு மூட
லழிக்குநற் றத்துவத் துணர்வே
தாவிய விஷயந் தருஞ்சுக விருத்தி
தழுவுவி க்ஷேபவா தனைகள்
தணந்திடும் விதேகத் தனிமுத்திப் பேறே
சச்சிதா னந்தமே யென்று
சேவிக்கு மடியார் சேவைபெற் கிவாய்
தென்கோவி லூரமர்ந் தருளித்
திருக்களர் தலத்திற் சிவமதாம் வீர
சேகர ஞானதே சிகனே. (சா)

ஈவதை முதலா யியம்புநாற் பொருளு
மெய்திடு மானவர்க் கரசே
இயமமுன் சமாதி யிறதா பியோகி
னெண்வகை யுறுப்பினுக் கிறையே

சிவவா ரோபச் செகபர மூன்றின்
  றிரிபெலாங் கடந்தசிற் சுகமே
திரிவித கரணா தீதமெய்ப் பரம
  சின்மயா னந்தநற் றெளிவே
பாவனா தீதப் பதவிசா யுச்யப்
  பரமுத்திப் பதியதாம் பரமே
பார்ப்பவன் பார்வை பார்க்குநற் பொருளும்
  பாறிடு மத்விதப் பயனே
தேவவென் றிறைஞ்சுஞ் சிந்தையெற் கருள்வாய்
  தென்கோவி லூரமர்ந் தருளித்
திருக்களர் தலத்திற் சிவமதாம் வீர
  சேகர ஞானதே சிகனே. (எ)

வாயுவி னுயிரின் வளருட லனலால்
  வருமதி யமுதமுண் சுடரே
மருவிரு நான்கின் மாறுமுந் நான்கின்
  வளருநா னுன்கின் பேற் கலையே
வயுமாத் திரையீ ரெட்டொடு மிரட்டி
  யேய்ந்த வெட் டெட்டையுங் கடந்தோய்
இரவியு மதியு மிசைநடு வொளிமே
  லெழினடங் கண்டிடு மிறையே

ஈயுமோ ரெட்டு மிரண்டொடு பத்து
மியைந்திடு பிரணவத் தொளியே
எட்டெனுஞ் சித்தி யியல்பத மனைத்தி
னேறு மொண் பதவியே யென்றுன்
சேயுலாம் புகழைச் செப்பினேன் காப்பாய்
தென்கோவி லூரயர்ந் தருளித்
திருக்களர் தலத்திற் சிவமதாம் வீர
சேகர ஞான தேசிகனே. (அ)

காப்புடன் மூலக் கனன்மு நூற் றறுபான்
காலொரு கடிகையெண் கடந்தோய்
கதிர்பனி ரண்டிற் கழியுமோர் நான்கைக்
கட்டுபெட் டெழுத்தினுக் குரியோய்
மூப்புட னன்கு முதிருமுந் நான்கு
முழுப்பதி னறினன் னிலேயோய்
மூன்றிரண் டொன்று மொழியுமா தார
மோனஞா னப்பெரு வழியோய்
நீப்புட னுங்கி னின்றசா தனர்க்கு
நித்தியத் துணர்வெடுத் துரைத்தோய்
நிலமொடைம் பூத நெறிதொ ணூற் ருறி
னிலேயடி யார்களுக் கருள்வோய்

சேப்புட னுயர்ந்த செம்பொனே யுகந்தா
டென்கோவி லூரமர்ந் தருளித்
திருக்களர் தலத்திற் சிவமதாம் வீர
சேகர ஞான தேசிகனே. (கூ)

உகந்தசற் குருவே யுணர்வெழு மருவே
யுருவேயிவ் விருவுரு வருவே
ஓங்குதன் மயமே யொளிமிகு சுயமே
யுயர்வே நற் றவமுறு நயமே
சுகந்தரு சிதமே சுருதியின் பதமே
சோதித மேசொலி னிதமே
துகளறு வடிவே துரியத்தின் முடிவே
சுயவிடி தலேலிலெ நடுவே
சகந்தனக் குரமே சாதுவட் டிரமே
தனிப்பர மேசுதைச் சிரமே
சண்மதத் துறவே சமயங்க டுறவே
சர்வமே யாதினு நிறைவே
செகந்தனில் வாழ்வே சேயெனக் கருள்வாய்
தென்கோவி லூரமர்ந் தருளித்
திருக்களர் தலத்திற் சிவமதாம் வீர
சேகர ஞான தேசிகனே. (க0)

முற்றிற்று.

சிவமயம்.

# ஸ்ரீ வீரசேகரஞானதேசிகர்

# பொதுப்பதிகம்.

## விநாயகர் காப்பு.

பொன்கலைவாணி புகழுமைதநயன்
வன்றுளைப்பாணி மலரடிதுணையே.

## நூல்.

தென்னவன்னகரத் திருக்கோவிலூ
ரன்னதானமடா லயத்தாண்டவர்
நன்னர்முத்துராம லிங்கத்தேசிகர்
மின்னருள்பெறு வீரப்பநாதனே. (க)

அருளறிவிலுண் டாகுஞ்சகமினை
யிருவகையின்மே லின்பருள்வாயுடற்
பொருளொடாவிகைக் கொண்டுநற்போதருள்
வெருளகற்றுமெய் வீரப்பநாதனே. (உ)

மெய்யுணரறிஞர் மென்மலர்க்கழ
லுய்யும்வண்ண முகந்தருள்வாய்மயற்
செய்யும்பன்மூன்றி ராகாதிருட்குவிண்
வெய்யவனெளி வீரப்பநாதனே. (ங)

ஒளிநிறைந்தமுதுச் சிமிசைச்சித
வெளியிற்றாலமெய் யாதிவிலகிநற்
றெளிமிகானந்தந் தேர்ந்தெழும்ப்ரம்மமா
மிளிர்தந்தாண்டருள் வீரப்பநாதனே. (ச)

ஆண்டவர்முத்து ராமலிங்கய்யர்சீர்
பூண்டமின்றெண்ட ராதிபுவிபெலாங்
காண்டவந்த கருணைத்தயாளுவே
வேண்டச்செய்குவாய் வீரப்பநாதனே. (ரு)

வாயிலைம்புலன் மார்க்கத்தெழுந்துளம்
பாயிலென்பயன் பார்க்கப்பற்றற்றுடற்
கோயிற்கொண்டதண் கோதிற்சுதைநிதம்
மேயில்வீடருள் வீரப்பநாதனே. (சு)

வீடிரண்டைந்து மேயவெழுத்தின்மே
ளுடிதங்கொளு நன்முனையாமிதற்
கீடிலையென்றிருதலை மாணிக்கம்
மேடிசைத்திடு வீரப்பநாதனே. (எ)

இசையெழுபத்தீ ராயிரநாடிசெய்
தசையொடாதிச் சமைந்தவிவ்வாக்கையார்
பசையடக்கிற் பரிபூரணம்மிகு
மிசைநிலைத்தருள் வீரப்பநாதனே. (அ)

நிலையுளோர்க்கதி நிண்ணயத்தேற்றியம்
மலையிலக்கா மௌனச்சொற்றந்திடுந்
தலைவனேநின்சரண் டந்தருளுவாய்
விலையின்மென்பணி வீரப்பநாதனே. (கூ)

மணியுயர்ந்த நன்மாமணியேயுளத்
துணிவுயர்ந்தசிற் சொற்றுணிவேயருள்
வணிகர்மாதவராதி வணங்கிடும்
விணிலத்தெவ்வரும் வீரப்பநாதனே. (ம)

எவ்வரும் புகழ்ந்தேத்து நின்றுதொழச்
செவ்வகத்திடஞ் செய்தருள் வாயெலா
மொவ்வவெய் யுணர்வாயெழூ முண்மையே
வெவ்வினையிலா வீரப்ப நாதனே. (மக)

வினையிலாதரு ளானந்த மேனிலை
தனைவிளக்குஞ் சதுமறைத் தேவுயி
றெனைவருமற் றெலாம்வாழ்க வாழ்கவே
வினையகற்றியாள் வீரப்ப நாதனே. (மஉ)

பொதுப்பதிக முற்றிற்று.



சிவமயம்.

## சுவாமிகள் அவதாரஸ்தலம்.



மணிமிகு மொண் வன்னிவன
　வளர்கழனி வாசல்
மகிமை பெறுங் கோவிலூர்ம
　டாலயத்தின் மேவி
யணிமிகு முன் முத்துராம
　லிங்கமெனுங் குருவா
யாண்டவர் தன் னவதாரங்
　காரைக்குடித் தலமே
துணிவுமிகுந் துறவருணு
　சலமெனு நற்சுவாமி
துணைவர் சிதம்பரமென்னுஞ்
　சுவாமியிவ ரிருவர்
திணியுடை தென்றேசமதிற்
　செல்வர் குழா மேவுஞ்
சிரணி தேவக்கோட்டைத்
　தோர்ந்துதித்த தலமே. (க)

தலமொடு விண்டலம் புகழுஞ்
  சதுர்மறைகள் புகழுஞ்
சங்கரி கொப்புடை யம்மை
  தாய்கருணை மேவும்
நலந்திகழுங் காரைக்குடி
  நன்னகரந்தன்னில்
ராமசாமி சுவாமியவ
  தாரஞ்செய்த தாமே
புலமிகழும் புதுமை மிகும்
  புதுவயலில் வந்தோர்
புநித ரென்னும் வீரப்ப
  சுவாமி புண்யவானே
திலகமிகுந் தேனிப்பட்டித்
  திவ்ய ஸ்தல நகரிற்
செல்வரண்ணாமலை யென்னுஞ்
  சுவாமிகள் வந்தனரே. (உ)

வந்தருடன் துலவுமுந்து
  முத்து ராமலிங்க
மாதவர் தம்மாணுக்கர்
  வகையின் முதனல்லாஞ்

சுந்தரஞ்சேர் செட்டியாரென்
சுவாமி யவதாரஞ்
சுகிர்தமிகுங் காரைக்குடிச்
சுத்ததல மாமே
செந்தமிழா ராமநாதஞ்
செட்டியா ரென்சுவாமி
திருவால வாய்க் கருணைச்
சிட்டர் குட்டையாவுஞ்
சந்தத நற்சிந்தை யொடுந்
தர்மமிடு வார்கள்
சார்ந்த தேவக்கோட்டையவ
தாரஞ் செய்தார் தானே. (ரு)

தானமிகும் வானமிகுந்
தருமமெலா மோங்குந்
தலங்கண்ட ஹூரிலரு
ஞசல மென்சுவாமி
மானத நன்ஞகப் பையா
வந்துதித் தாரிருவர்
வளமை மிகும் ராயபுர
மாநகர மீதின்

ஞானமிகு மப்புக்குட்டி
சுவாமியவர் வந்தார்
நலமிகுந் தெங்நாளுஞ் செல்வ
நண்ணும் பள்ளத்தூரில்
மோனமிகுஞ் சின்னய்ய
முத்து வீரப்பய்யா
முத்திபெறு சுவாமி கடா
முதித்த முறை நெறியே. (௬)

நெறியின் மிகுஞ் செல்வமெலா
நிறைந்தவூ ரென்கல்லல்
நேர்ந்துதித்த வெள்ளையப்ப
சுவாமி ஸ்தலமாமே
பறியெனும் பொற் றிருமேனிப்
பழனியப்பச் சுவாமி
பதிநிதியா நேமுத்தம்
பட்டியவ தாரம்
அறிவு மிகுந்தருளு மிகு
மன்பர்கண் மிக்காகும்
அன்னதான தர்மமொடு
மன்னர் புகழ் வாழ்வுங்

குறிகுணமும் பெருகு செம்பொன்
 கோட்டையூர் வந்துதித்தார்
குலவு அண்ணாமலை சுவாமி
 குவலயம் வாழ்கவுமே. (௫)

சுவாமிகள் அவதாரஸ்தலம்.

முற்றுப்பெற்றது.



தனியன்.

வேதமோதும் வீரப்பஸ்வாமி யெனும்
வீரசேகர ஞானதேசிகன்றன்
பாதநாளும் பணிந்துளத் தேத்தினாற்
பதிநிதியதிப் பண்பினற் பாவையர்
போதமிக்கநற் புத்திரர் சுற்றமெய்
புண்யத்தோடு சுவர்க்கமேற் போகநன்
னீதமாமௌன ஞான நிட்டையாம்
நின்மலக்கதி நேர்வீடுண் டாகுமே.

பிரமநற்சரியமேவி பேரருட்டுறவுபூண்டு
வுரநெறிவழுவாதொக்கு வுலகுபகாரநன்மை
திரம்திகொண்டவீர ஸ்ரீசகாஞானதேசி
கரமலரடிகள்போற்றத் தருணைநல்வாழ்வுண்டாமே.

புதுவயற்[illegible]ஓர்புரந்
தடியார்க்கெல்லா[illegible]
சதுமறைப்பெருந்துறை[illegible]த்கித் தனித்திருக்
களரிற்சென்று
வதுவெதுவென்று[illegible]கைக் கதிதசிற்
சிவமாய்மேவும்
பொதுமைவீரப்பசுவாமி புகழ்தலால்
வாழ்வுண்டாமே.

சிவபெருமான் றிருவடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்.

